# தூர விலகி நில்! துள்ளி வருகுது வேல்!!


திராவிடநாடு

மலர் 9 | 1–10–50 | இதழ் 15

இலங்கை 8 சதம்] விலை அணா ஒன்று [மலாய் நாடு 6 காசு


# ஆளவந்தாரே, ஆபத்தை அணைக்காதீர்!

## பொதுமக்கள் படமெடுத்தாடும் பாம்புகள்

### அண்ணாசிறையில், தம்பிகள் வெளியில்

### சென்னையில் சம்பத்

"மக்களை என்னவென்று நினைத்துக்கொண்டாய், ஏ, மதியிருண்ட சர்க்காரே, அவர்கள் படமெடுத்தாடும் பாம்புகள். ஆடும்வரை அழகாய்த்தானிருக்கும். அதைப் பார்த்து மகிழவேண்டுமானாலும் தூர இருந்துதான் பார்க்கவேண்டும்—நெருங்கினால் கடித்துவிடும்!' என்று குறிப்பிட்டார், தோழர் ஈ. வே. கி. சம்பத், தான் பேசுகையில்! 22-9-50 மாலை கான்ரன்ஸ்மித் நகர மைதானத்தில் சென்னை திராவிட முன்னேற்றக் கழகத்தின் சார்பில் ஒரு பொதுக்கூட்டம் நடந்தது. தோழர் எஸ். வி. லிங்கம் தலைமை வகித்தார். தோழர்கள் நெடுஞ்செழியன், மதியழகன், நடிப்புப் புலவர் கே, ஆர். இராமசாமி, ஈ, வெ. கி. சம்பத் ஆகியோர் பேசினர். என். வி. நடராசன் கண்டனத் தீர்மானம் கொணர்ந்தார். சுந்தரமூர்த்தி வழி மொழிந்தார். பலத்த கைதட்டுதலுக்கிடையே தீர்மானம் நிறைவேறிற்று.

தோழர் ஈ, வே. கி. சம்பத் தமது பேச்சில், செப்டம்பர் 18-ல் நடந்த அண்ணா சிறை சம்பவம் குறித்து கூறியதாவது:—

**அண்ணா இல்லை**

இதே, கான்ரன்ஸ்மித் மைதானத்தில்தான், மே தினத்தை நாம் கொண்டாடினோம். அன்று அண்ணா பேசினார், அவருடன் வங்கக்கவி அரீந்திரநாத் பேசினார். ஆனால் இன்று அண்ணா நம்மிடை இல்லை—திருச்சி சிறையில் இருக்கிறார்!

அண்ணா, நாடகமாக, நூலாக, பேச்சாக, சினிமாவாக நம்மிடை உலவினார். அறிவுப்பிரச்சாரம் செய்தார். பம்பரம்போல சுற்றி பகுத்தறிவொளியைப் பரப்பினார். நாம் எதிர்பார்த்தோம் வெகுநாளாய், இந்தமதியிருண்ட சர்க்கார் அவரை வெளியில் விட்டுவைக்காதென்று! எதிர்பார்த்தது நிகழ்ந்துவிட்டது. அண்ணாவைச் சிறையில்தள்ளி விட்டார்கள். அதனால் நாம் உணர்ச்சி குன்றிவிடவில்லை. நம் ஊக்கம்பொன்றிவிடவில்லை. அவர் இல்லாததால் நம் இயக்கக் காரியங்கள் கெட்டுவிடவிடமாட்டோம்.

அண்ணா நம்மிடை இல்லை. ஆளவந்தார் அவரைப்பிரித்துவிட்டனர். இன்று அவர் சிறையில்! ஏன்? ஒரு செத்துப்போன சட்டத்தைக்காக்க, ஒருநாட்டின் ஜீவியஓவியத்தைச் சிறையில் தள்ளிவிட்டார்கள்!

**அவர் செய்த குற்றம்!**

'ஆரியமாயை' புத்தகம் எழுதினார். அது வகுப்புத் துவேஷத்தை ஊட்டுகிறது. என்றுகூறி சிறைத்தண்டனை தந்துள்ளனர்.

புத்தகம் எழுதியதுதான் அவர்செய்த குற்றம்—மகாபாதகம்! அதுவும் அந்தப்புத்தகம் வந்து நெடுநாளாகிவிட்டன. படித்து முடித்துக் கிழிந்துபோகும் நிலைக்கு வந்துவிட்டது. அந்த 'ஆரியமாயை'க்குத் தடைவிதித்து, அண்ணாவுக்கு 153A—என்ற செத்துப்போனசட்டத்தின்மூலம் தண்டனை தந்துவிட்டனர்.

**செத்துப்போன சட்டம்**

இந்தியக்குடியரசு சட்டம் அமுலுக்கு வந்தவுடன் 153-A செத்துமடிந்து சாம்பலாகிவிட்டது. ஜனவரி 26உடன் இதுசெத்துவிட்டது. ஏனெனில் இந்தியக் குடியரசுசட்டத்து 19 ஷரத்தில் எண்ண, பேச, எழுத உரிமை உண்டு என்று கூறப்படுகிறது. அதில் ஒருவரையொருவர் திட்டக்கூடாது என்று குறிப்பு காட்டமுடியுமே தவிர உண்மையை ஊராருக்குச் சொல்லக்கூடாது என்று எப்படிக்கூறமுடியும்? இதனை அடிப்படையாகக்கொண்டுதான நாம் வழக்காடவேண்டும்.

**செப்டம்பர் 18.**

சென்ற ஆண்டு செப்டம்பர் 17ந்தேதி தி. மு. கழகம் தொடங்கப்பெற்றது. இந்த ஆண்டு செப்டம்பர் 17ம் நாள் தி. மு. கழக முதலாண்டு நிறைவு விழாவை வெற்றிகரமாகக் கொண்டாடினோம். அதற்கும் மறுநாள் — செப்டம்பர் 18-ல் அண்ணா சிறை புகுந்தார். ஓராண்டு உழைப்பிற்குப்பின்னால் சிறைப்பட்டார் அண்ணா.

செப்டம்பர் 18, திராவிடர் மறக்கமுடியாத—மறக்கக்கூடாத நாள்! அண்ணா சிறை சென்றார் அன்று. இந்த சிறை சம்பவம் என்ன தெரிவிக்கின்றது நாட்டோருக்கு! அதை கணப்பொழுது எண்ணிப்பாருங்கள்.

**கிலிபிடித்துவிட்டது!**

தி. மு. க. பொதுச் செயலாளரைக் கண்டு இவ்வரசாங்கம் அஞ்சுகிறது, நடுங்குகிறது என்றுதானே நமக்குத் தெரிகிறது. அவர்களை கிலி பிடித்தாட்டுகிறது! அச்சத்தால், அறிவுமழுங்கிவிட்டது அவர்களுக்கு. அதனால்தான் அண்ணாவை சிறையில் அடைத்துவிட்டது.

**ஆளவந்தாரே! ஆளவந்தாரே!**

ஓ, அரசாங்கமே! கொஞ்சம் சொந்தபுத்தியுடன் யோசித்துப்பார். ஒரு இயக்கத்தின் தலைவரை சிறையில் அடைப்பது, அரசாங்கத்திற்கு பாதுகாப்பல்ல — அதுதான் அபாயம்! இதை நீ விரைவில் அறியப்போகிறாய். அதுமட்டும் உறுதி!

இதோபார், பத்தாயிரக்கணக்காக கூடியுள்ள மக்களை! மேதின விழாவில் அண்ணாவின் சொற்பொழிவைக் கேட்டகூடிய மக்களைபோல இன்று மூன்று மடங்கு பெரிய அளவில்! அண்ணாவின் சொற்பொழிவு செய்யாத வேளையை, நீ அவரைப் பூட்டிவைத்திருக்கிறாயே, சிறை அது செய்துவிட்டதே!

அட, கருத்திருண்ட ஆட்சியே, அண்ணாவின் 'ஆரியமாயை'க்கு 153A பிரிவிப்படிக் குற்றம் சுமத்தாதே—அர்த்தமில்லை. காசிக்கில் தலைமை வகித்தாயே, தாண்டன், அவர் பேச்சுக்கு—போடு—அவர் பேச்சில் வரிக்கு வரி வகுப்புத்துவேஷம் கர்த்தனமாடுகிறது!

கவனமிருக்கட்டும், கொடுமை புரிந்தோர், கொடுங்கோலாட்சி செலுத்தினோர் எவரும் நீடித்து நின்றதில்லை. அதிலே உலக சரித்திரம் தருகின்ற முடிவு இது.

**யோசி, யோசி, நன்றாக யோசி!**

ரோம் நாட்டிலே, கொடுமை புரிந்தான் நீரோ மன்னன். என்ன ஆனான்? கடைசியில் கல்லால் அடிக்கப்பட்டு, காரியுமிழப்பட்டு மடிந்தான். உன் கதையும் இப்படித்தான் முடியவேண்டும் என்று எண்ணுகிறாயே, யோசித்துப்பார், காங்கிரஸ் அரசாங்கமே! நினைத்துப்பார் நன்றாக—தெளிவாக!

பிரான்ஸ் நாட்டுமன்னன் பதினான்காம் லூயியின் பேரன் பதினாறும் லூயி என்ன, எழுத, எடுத்துக்கூற எதற்கும் உரிமைதர மறுத்தான். பேருவீரர்களை சிறையில் தள்ளினான். முடிவில் தன் ஐந்தலைபத பாலையேறுமொளவேண்டிவந்தது.

இங்கிலாந்தை ஆண்ட சார்லஸ் மன்னன். கொடுமைகள் பலபுரிந்தான். கடைசியில் தன் தலையையே தந்திட்டான்!

**எங்களுக்குத் தெரியும், முடியும்!**

இந்த அரசாங்கம், உலக நடவடிக்கைகளைக் கவனத்தில்கொண்டு காரியமாற்றவேண்டும் நீரோவைப்போல, லூயியைப்போல, சார்லஸ் போல வெறியாட்டமாடினால் வேதனைதான் விருந்தாகக்கிடைக்கும்.

எங்கள் உரிமைகளைப் பறிக்கிறது இந்த அரசாங்கம். எங்கள் உரிமையை எப்படி வாங்குவது என்று எங்களுக்குத் தெரியும்—முடியும்!

ஆனால் விவரங்கெட்ட இந்த மாகாண சர்க்காரைக்கண்டால் எங்களுக்குப் பரிதாபமாக இருக்கிறது! கவலையாகவும் இருக்கிறது! டில்லி பிரம்மாஸ்திரத்துக் சொல்வதை தலைகுனிந்து கேட்கிறது. அவர்கள் போடுகின்ற எலும்புத்துண்டைப் பெரிதாக எண்ணிக்கிடக்கிறது, வெட்கம் துளியுமில்லாமல்! அதற்காகத்தான் பெரிதும் வருந்துகிறோம்.

**பார், பார்!**

ஓ, அடக்குமுறை ஆட்சியே, பார்பார், நன்றாகப்பார், அமைதியாக கவனித்துக் கவனமாகப் பார்! அண்ணாவுக்கு சிறை — இதோ இலட்சத்தை எட்டிப்பிடிக்கும் கூட்டத்தினர் ... நாம் ஆறுமாதத்திற்குள் எத்தனை எத்தனையோ ... உடன் இம்மாதிரி பார்க்கப்போகிறாய்! [illegible]

(அடுத்த பக்கத்தில்)

---

## கருப்புக் கொடி—தயாராகட்டும்!

—✱—

கருப்புக் கொடி காட்டுவது—நமது உரிமை கேட்கையை வடநாட்டு ஆதிபத்தியம் உணரச் செய்வதற்காகும்.

வடநாட்டு ஆதிபத்தியம் தனது கோரப் பிடிக்குள் நம்மைக் கிடக்கச் செய்ய, கொக்கரிக்கிறது. அதற்கு பல தென்னாட்டினரும், ஒத்துழைக்கிறார்கள்.

டில்லி ஆட்சியை நடத்துபவரும், திட்டங்கள் தீட்டுவோரும்—மேலிடத்தைச் சார்ந்த, காங்கிரஸ் மந்திரிகள்தான். அவர்கள் நம் உரிமைக் கிளர்ச்சியை உணரவேண்டும்.

அவர்கள் இங்கு வரும்போதெல்லாம், கருப்புக் கொடிகள் காட்டப்படவேண்டும். அத்தகைய, முக்கியஸ்தானம் வகிக்கும், மந்திரிகளில் ஒருவர்தான் திரு. இராசகோபாலாச்சாரியார்.

அவர், அடுத்தமாதம், மூன்றாவது வாரத்தில் சென்னைக்கு வருகிறாராம்.

தென்னாட்டை—வடவருக்கு அடிமைப்படுத்த ஒத்துழைக்கும் எவரையும் "கருப்புக்கொடி"களே, வரவேற்கும் என்பதை உணர்த்த நல்ல சந்தர்ப்பம்.

### திராவிடத் தோழர்களே, கவனம்! கவனம்!

---

## செயற்குழுவின் வேண்டுகோள்

—✕—

பொதுச் செயலாளர் அண்ணா சிறைக்குள் கிடக்கிறார். நாம் வெளியிலிருக்கிறோம். இந்தச் சோதனை வேளையில் நமக்கிருக்கும் பொறுப்பு மகத்தானது. அமைதியும், கட்டுப்பாடும் நிலவச் செய்யவேண்டிய பொறுப்பு நம்முடையது. எத்தகைய ஆத்திர உணர்ச்சிக்கும் ஆட்படாமல், ஒழுக்கையும், பொறுப்பையும் நிலைநாட்டவேண்டியவர்களாக இருக்கிறோம். இதை மனதில் நிறுத்தி, ஆங்காங்குள்ள தி, மு. க. கிளைக் கழகத்தினரும், தோழர்களும் நடந்துகொள்ளுமாறு வேண்டிக்கொள்ளுகிறோம்.

—செயற் குழுவினர்.

# சேர்ந்து வாரீர், சிவகெங்கை நோக்கி!

## ஆளவந்தார் கண்டு அலற அணிவரும் வாரீர்!

## எச்சரிக்கை எழுப்ப எல்லோரும் வாரீர்!

புயலும், கடலும்போல கொந்தளித்துக் கிடக்கிறது நாடு.

சோதனையும், வேதனையும் தாக்க நாமெல்லாம் துடித்துக் கிடக்கிறோம். நமது கழக வரலாற்றிலே—தியாகப் பரிசோதனை நடக்கத் துவங்கி விட்டது.

நமது வீரத்தையும், வெற்றி முழக்கத்தையும், உண்மையாக்கிக் காட்டவேண்டிய சந்தர்ப்பம், இது.

பொதுச் செயலாளர் அண்ணா—"அகிம்சா ஆட்சியில்" சிறைக்குள்ளே கிடக்கிறார். நமது உழைப்பைக் கண்டு பூரித்து நிற்கவேண்டியநேரத்திலே அவர் பூட்டிய சிறைச்சாலைக்குள், கிடக்கிறார்.

பொங்குகிறது, நமது இதயம், இந்த பொல்லாங்கு தரும் ஆட்சியினரின் . போக்கால்! ஆயினும், ஆவேச உணர்ச்சியால், நமது கடமைகளை மறந்து விடலாமா? நாட்டை மீட்கும் மகத்தான பணியி லீடுபட்டிருக்கும் நாம்—ஆத்திரத்தால், பொறுப்பை மறந்து விடலாமா?

"வாளும் வேலும் — மார்பிலே பாய்ந்திடினும், கடமையாற்றக் கலங்கோம்" என்ற வெற்றிப் பேச்சைச் செயலாக்கிக் காட்ட வேண்டாமா?

**சேர்ந்து வாரீர், சிவகெங்கைக்கு!**

முன்பு குறிப்பிட்டபடி, 30-9-50, 1-10-50 சனி, ஞாயறு கிழமைகளில் இராமநாதபுர முதலாவது தி. மு. க மாநாடு சிவகெங்கையில் நடைபெற விருக்கிறது.

மாநாட்டுக்காக, ஆயிரக் கணக்கான செலவில், பிரம்மாண்டமான ஏற்பாடுகள் செய்யப்பட்டு வருகின்றன. எம். எ். மாரியப்பா, டி. வி நமசிவாயம், நாகூர் ஹனீபா, யூசுப் ஆகியோரது இசை விருந்து, உண்டு.

நடிப்புப் புலவர் கே. ஆர். இராமசாமியோடு, இரா. நெடுஞ்செழியன், ஈ வே கி. சம்பத் ஆகியோர் நடிக்கும் "வேலைக்காரி" நாடகம், நடைபெறப் போகிறது.

**மாநாடு கூடும் நேரம்,**

★ நெருக்கடியான கட்டம்,
★ நெஞ்சு, கொதிக்கும் நேரம்;
★ நமக்கோர் சோதனை காலம்!
★ நாட்டவர் நம்மை பற்றி அறிந்து கொள்ளும், வேளை!
★ மாற்றார், மனமருட்சி கொள்ளவேண்டிய சந்தர்ப்பம்!
★ அண்ணா வெஞ்சிறையில் கிடக்கும், கொடுமையான வேளை!!

ஆகவே, சிவகெங்கை மாநாடு, திராவிட முன்னேற்றக் கழக வரலாற்றின் முக்கியமான கட்டத்திலே கூடுகிறது. அண்ணாவை, அடக்குமுறைக்குப் பலியாக்கிவிட்ட ஆளவந்தாருக்கு எச்சரிக்கை தரும் மாநாடாகக் கூடுகிறது.

'இளங்காளைகள்தாம் இவர்கள் — எனினும்—இவர்களால் எல்லாம் முடியும்' என்பதை, நாம் காட்டிக்கொள்ள வேண்டிய—ஓரே சந்தர்ப்பம், சிவகெங்கை மாநாடு.

அடக்குமுறைகள் ஆயிரமாயிரம் வந்தாலும் தாங்குவோம்! சகிப்போம்! என்று, 'அகிம்சா ஆட்சி'க்கு சவால் தரப் போவது—சிவகெங்கை, மாநாடு.

சிங்கத்தைச் சிறையிலடைத்துப் போட்ட சிறு நரிகளே! உங்களது கர்வத்தைப் பங்கப்படுத்தும் ஆயிர மாயிரம் சிங்கங்கள், இதோ நிற்கிறோம்—பார்! என்பதைக் காட்டப் போவது—சிவகெங்கை மாநாடு. "கோழைகளல்ல, கொட்டுவோம் முரசு!" என்று, வீரப்பண் எழுப்பப் போவது—சிவகெங்கை மாநாடு.

சிவகெங்கை மாநாடு மாவட்ட மாநாடுதான்—ஆயினும் மாகாண முழுமையுள்ள,

கழகத் தோழர்கள்,
இயக்க வீரர்கள்,
பிரச்சாரக் குழுவினர்
மாணவ மணிகள்
எழுச்சிக் காளைகள்
போராட்டப் புலிகள்

எல்லோரும், ஆயிர மாயிரமாக அணிவகுத்து நிற்கவேண்டிய மாநாடு.

நமது, சங்கொலியும், வீரப் பண்ணும் வானை எட்ட, வெற்றிச் சிந்து பாடப்போகிறோம், அங்கு!

"வெற்றியின் தூதுவர்கள் நாங்கள்—வீண் கர்வம் கொள்ளாதே!" என்று, ஆளவந்தாருக்கு, எச்சரிக்கைத் தரப்போகிறோம் அங்கு!

"பார்! பார்! எமது பட்டாளத்து வீரர்களை" என்று, ஆதிபத்திய வெறியர்களை, அலறச்செய்யப் போகிறோம—அங்கு!

பொன்னான வேளை—நமது பொறுப்புக்கு கண்ணான நாள்!

ஆகவே, எல்லோரும் வருக — மாவட்டங்களின் மணிவிளக்குகளே! நாட்டை அதிரச் செய்யும் நல்ல தம்பிகளே! இலட்சிய வெற்றிக்காகத் தங்களைத் தத்தம் செய்துவிட்ட தமிழகச் சிங்கங்களே! தாய்மார்களே! பிரச்சார வீரர்களே! மாணவ மணிகளே! வாரீர், திரண்டு! அடக்குமுறைக்குச் சாவு மணி யடிக்க வாரீர், சேர்ந்து!

**வாரீர்! வாரீர்!! வாரீர்!!!**

சேர்ந்து வாரீர் சிவகெங்கைக்கு! பொறுப்பைக் காட்ட வாரீர்! வீரச் சிந்து பாட வாரீர்! 'சோராதார்' நாம் என்று காட்ட வாரீர்! தொல்லை தரும் ஆட்சிக்கு உணர்விக்க வாரீர்! எல்லோரும் வாரீர் சிவகெங்கை நோக்கி!

✲

### ஏஜண்டுத் தோழர்களுக்கு

மலர் வேண்டும் அதிகமாக — என தந்தி, தபால் மூலம் கேட்டனர்—நேரிலும் பலர் வந்தனர். அவர்கள் விருப்பப்படி, வேண்டிய அளவு மலர் கொடுக்க முடியவில்லை. எதிர்பாராத காரணங்களால் குறிப்பிட்ட அளவே அச்சிட்டு, எல்லோருக்கும் பகிர்ந்தளிக்க வேண்டியதாகிவிட்டது. இனி மலர் இல்லை. தோழர்கள் மன்னிப்பார்களாக!

மானேஜர்.

(முன் பக்கத் தொடர்ச்சி)

மக்களும் பலாத்காரத்தை விரும்பினால், உன்னைத் தூள் தூளாக்கிவிட முடியும்.

**படமாடும் பாம்புகள்!**

மக்களே என்னவென்று எண்ணுகிறாய்? அவர்கள் படமெடுத்தாடும் பாம்புகள் ஆடும்வரை அழகாய்த்தானிருக்கும். அதைப்பார்த்து மகிழ வேண்டுமானாலும் தூரவிலகி நின்றுதான் பார்க்க வேண்டும். நெருங்கினால், சாவாய்-இது திண்ணம்! பாம்பு பாய்ந்து கடித்துவிடும். ஆபத்தை நீயாக ஏன் அணைத்துக் கொள்கிறாய்?

**வாலை நீட்டாதே!**

அடக்குமுறையை ஆளுக்குப் பாதியாக பகிர்ந்து கொண்டு, மத்திய சர்க்காரும், மாகாண சர்க்காரும் ஏவியபடியே உள்ளனர்—ஏ, அற்பாயுள் காங்கிரஸ் ஆட்சியே! எச்சரிக்கிறேன்—வாலை நீட்டாதே, நீட்டினால் நிச்சயம் நறுக்கப்படும் என்று, மக்கள் சமுத்திரத்தின் சார்பில்! சுருட்டிக் கொள் உன் சூதை என்று மக்கள் சொல்லத் துடிப்பதை நான் சொல்கிறேன், அவர்களுக்காக!

**'கல்கி' கும்பல்!**

இந்த வாரக் 'கல்கி' மேலட்டையில் திவாகர் சிரித்துக்கொண்டிருக்கும் படம் போடப்பட்டிருக்கிறது. அட்டைப் பட விளக்கத்தில் "நானும் ஒரு அசல் திராவிடனே" என்று தலைப்பு போடப்பட்டுள்ளது! நாம் காட்டிய கருப்புக் கொடி திவாகரை யார் என்று தெரிவித்ததாம்! 'கல்கி' எழுதுகிறது.

ஆர், திவாகரை நம் கருப்புக்கொடி அறிமுகப்படுத்தியது. அவர் மந்திரியாக இருந்து செய்த சேவைகளால் அறிமுகமாகவில்லை.

அவர், நானும் ஒரு அசல் திராவிடன்தான் என்று கூறினார். உண்மை! திவாகரே, நாங்கள் கருப்புக் கொடி காட்டியதால்தான் நீர் உம் பழைய பரம்பரையைத் திரும்பிப் பார்த்தீர்—இவ்வளவு நாள் அந்த உணர்ச்சி எங்கேபோயிருந்தது? மங்கி மடிந்துவிட்டதா? 'கல்கி' கும்பலும், கருப்புக் கொடியைக் கண்ட பிறகுதான் தங்கள் பழைய பரம்பரையை எண்ணிப் பார்த்தது.

**அடுத்தது, ஆச்சாரியாருக்கு!**

அறிமுகமில்லாத திவாகருக்கே இத்தனை ஆர்ப்பாட்டம்—அடுத்த திங்கள் வரப்போகும் ஆச்சாரியாருக்கு—மகாகனம் பொருந்தியவருக்கு —இந்தி எதிர்ப்புப் போராட்டத்தில் இரண்டு பிணங்களைத் தந்த உத்தமருக்கு—நாம் அளிக்கும் வரவேற்பு எப்படியிருக்கும் என்பதை 'கல்கி'யார் காணட்டும்.

**நம் கவலை!**

இரண்டு நாட்களாகவே, என்னையுமறியாமல் ஒரு கவலை என் மனதைப்பிடித்தாட்டுகிறது. சூது—சூழ்ச்சி-சுயநலம்கொண்ட இந்த அரசாங்கத்தின் மீது நம்பிக்கையில்லை. இதுவரை நடத்தியுள்ள நாணயக் குறைவான காரியங்களைப் பார்க்கிற பொழுது நமக்கு சந்தேகம் பிறக்கிறது. சிறைக்குள் சென்ற அண்ணாவை ஆபத்தின்றி அனுப்புவார்களா என்று எண்ணும்பொழுது வருத்தம் வருகிறது. ஒருவேளை, அண்ணாவுக்கு ஒரு சிறு உபத்திரவம் நேருமானாலும் நாம் பொறுத்திருக்கமாட்டோம். பொங்கி யெழுவோம். புத்தி புகட்டுவோம். அடக்க முடியாத பெரும் போராட்டத்தைத் தொடங்கிவிடுவோம் என்று எச்சரிக்கை செய்கிறேன்.

**ஆத்திரம் வேண்டாம்!**

முன்னேற்றக் கழகத் தோழர்கள் ஆர்வத்தோடு — ஆனால் ஆத்திரமும், படபடப்பும், துளியுமின்றி—அமைதி கெடாமல் பணிபுரிவதைக் காண்கிறேன். மகிழ்ச்சியடைகிறேன்.

அண்ணா கூறியபடி, யானை பிடிக்கும் பணியிலிருந்து, பூனை பிடிக்கச் செல்லக்கூடாது. அண்ணாவை பலியிட நேரிடினும் நம் இலட்சியத் திராவிடத்தை அடையவேண்டும்.

சென்னைத் தோழர்கள் கருப்புக் கொடிகளால் திவாகரைத் திணறடித்தார்கள். அடுத்து வருகிறார் ஆச்சாரியார்-கவனமிருக்கட்டும்!

மதுரையில் ஜகஜீவன்ராம் வரப்போகிறார். கருப்புக் கொடி காட்ட, மதுரைப் பொதுக்கூட்டத்தில் கூடியிருந்த முப்பதினாயிரம்பேரும் ஆரவாரத்தோடு ஒத்துக்கொண்டனர்.

அண்ணா வெளியில் வரும் வரை, தோழர்களே, அவர் காட்டிய பாதையில், கூறிய முறையில் நல்லதம்பிகளாகப் போராட்டம் நடத்துவோம் அவருக்கு வெற்றிப் பட்டியலைக் காட்டுவோம்!" என்று கூறி முடித்தார்.

✲

## நன்றியறிவிப்பு.

❁

என் வாழ்க்கைத் துணைவரும், சேலம் கல்லூரித் தலைவருமான உயர் திரு. அ. இராமசாமிக் கவுண்டர் M. A., L. T. அவர்கள் இயற்கை யெய்தியதைக் குறித்து கழகங்களும், நண்பர்களும் அனுப்பிய ஆறுதல் தீர்மானங்களுக்கும், கடிதங்களுக்கும் நானும் என் மக்களும் எங்களது நன்றியைத் தனித் தனியே அறிவிக்க இயலாமையால் இதன் மூலம் தெரிவித்துக் கொள்கிறோம்.

கனகம்மை இராமசாமி.



# பெரியார்—அண்ணா, விடுதலை

## ஆளவந்தார் சிந்தனை தெளிவடைந்தனர்

### வெற்றி! வெற்றி! முழு வெற்றி!

பூட்டிய இரும்புக் கூட்டின் கதவு திறக்கப்பட்டு விட்டது.
சிங்கங்கள் வெளியில் வந்துவிட்டனர்!

பத்தே நாட்கள்—பாராளும் உரிமை பெற்ற ஆளவந்தாரின் இதயத்தைக் குலுக்கிவிட்டன!

18-9-50-ல் பெரியார், அண்ணா சிறைக்கனுப்பப்பட்டனர். நூல் எழுதிய குற்றத்திற்காக!

28-9-50-ல் வெளியில் விடப்பட்டனர்—சர்க்காரின் சிந்தனை தெளிவடைந்தால்!

பத்து நாட்களுக்கு முன்னால் மாலையிலே—இருளும் வேளையிலே திருச்சி சிறைக்கதவு மூடிக்கொண்டது! 28-9-50 காலைக் கதிரவன் ஒளியிலே சிறைக்கதவு திறக்கப்பட்டு விட்டது.

இருட்டிலே நடமாடிய சர்க்கார், ஒளியிலே உலவத் தொடங்கிவிட்டது—அவர்கள் காலம் கடந்தாவது கருத்துத் தெளிவடைந்தனரே என்பதற்காக அவர்களைப் பாராட்டுகிறோம், மனமார!

நாயகத்தின் நாயகங்கள் வெளியில் வந்துவிட்டனர். தேம்பிய திராவிடத்திலே களிப்பு! குமுறிக் கிடந்த வீரக்குமரர், குமரிகள் இதயம்

களிலே குதூகலம்! நல்லவர், நாட்டு நலம் விரும்பிகள், சுதந்திரத்தின் உண்மைப் பொருள் உணர்ந்தோர்—நாட்டில் நடமாடும் எல்லோருமே எல்லையில்லா மகிழ்ச்சிக் கடலில் மூழ்கிவிட்டனர்.

வகுப்புத்துவேஷம் ஊட்டும் வகையில் தீட்டப்பட்ட நூல்கள் 'ஆரிய மாயை' 'பொன் மொழிகள்' எனக்கூறி நீதி மன்றம் அண்ணாவுக்கும், பெரியாருக்கும், ரூ 700 அபராதம், கட்டத் தவறினால் ஆறு மாத சிறை வாசம் என்று தீர்ப்பளித்தது. இன்று ஆளவந்தவரோ, அவ்வழக்குகளைச் சரியாகப்பரிசீலித்ததில் அவர்களைக் காவலில் வைக்கவேண்டிய அவசியமில்லையெனக் கருதி விடுதலை செய்ய உத்திரவு பிறப்பித்து விட்டனர்!

'வெற்றியடா நமக்கு, வீரத்தோள்கள் பூரிக்குதடா, தோல்வி காணுதிரர் வழி வந்தவரடா நாம்' என்று வெற்றி விருத்தம் பாடியாடி மகிழ்கின்றனர், திராவிடர்.

'தொட்டதை விடுவதில்லை—எடுத்ததை முடிக்கும்வரை படுத்ததில்லை நாம்' என்று எக்காளமிடுகின்றனர் திராவிடர், இன்று.

இந்தியை எதிர்த்தோம் — வெற்றி கண்டோம்! எழுத்துரிமை போர் தொடக்கினோம். ஆரம்பத்திலேயே அமோக வெற்றி! ஆம், நாம் நீதியின் படிகளிலே ஏறி நேர்மை மாடியைத் மீதடி நடப்பவர்கள். ஆகவே தோல்வி கண்டதே இல்லை—இதுவரை! இனியும் வெற்றிப் பாதையில் நடப்போம் என்பதும் உறுதி.

பெரியார், அண்ணு விடுதலை—நமக்கொரு பெரும் வெற்றி—நாட்டோருக்கு நாம் செய்துவரும் தொண்டு நீதியின்பாற் பட்டது என்பதற்கொரு அத்தாட்சி!

ஆளவந்தாரின் விவேகத்தைப் பாராட்டுகிறோம்—இனியும் இந்த விவேகப் போக்கு நீடிக்கவேண்டும் என்று எதிர்பார்க்கிறோம். விவேகத்தோடு, வீரமும் கைகோத்தால் திராவிடம் தேம்பும் நிலையொழித்து தெளிவடையும் என்று கூறுகிறோம்—நாட்டோர் சார்பாக!

ஒரு வகுப்பாரை எதிர்த்தும், வடஇந்தியர்மீது வெறுப்பை வளர்த்தும் இங்கு பிரச்சாரம் நடக்கிறது. பேச்சின் மூலம், எழுத்தின் மூலம், இந்தத் துவேஷம் பரப்பப்படுகிறது. இது சட்ட வரம்பிற்குள் அடங்கியதாகாது. ஆகவே வழக்குப் பதிவு செய்யப்பட்டதாம்—சர்க்காரும் வழக்காட உத்திரவிட்டனராம்.

ரூ. 700-ல், அவர்கள் பரப்பிய கருத்தையும், எண்ணத்தையும் மக்கள் மனதிலிருந்து விரட்டிவிட சட்டம் எண்ணிற்று—கருத்துக்கு திரை கட்ட ரூ. 1400 காணிக்கை கேட்டது, வழக்கு மன்றம்.

தலைவர்கள் அபராதத் தொகையைக் கட்ட மறுத்தனர்—சிறைக்குள் தள்ளிற்று சட்டம்.

சட்டத்தை நடத்தும் சர்க்காரோ புனராலோசனை செய்து, சிறை வேண்டாம், அது தவறு என்றுணர்ந்து விடுதலை செய்ய முடிவு செய்துவிட்டது. நல்ல முடிவு—இம்முடிவிற்கு இந்தத் தடவையில் மட்டுமல்ல, இதற்கு முன்னுல் பல தடவைகளில் வந்துள்ளனர்—இனியும் வரப்போகிறூர்கள்! ஆகவே, நல்ல பாதையில் நடக்க முனைந்துவிட்டார்கள் நாடாள்வோர் என்ற நம்பிக்கை பிறக்கச் செய்யும் நல்ல தீர்ப்பு இது! சரியாக, நம்மை, நம் எண்ணத்தை, நம் இலட்சியத்தைப் புரிந்துகொண்டார்கள் சர்க்கார் என்பதைக் காட்டுகிறது! அவர்களின் தெளிந்த சிந்தனை வளரட்டும்!



# திராவிடத்தில் புதியதொரு 'பூகம்பம்'

## பொதுமக்கள்—உலவும் எரிமலைகள்

## சிறையில், அண்ணு-பெரியார்

### நாடு முழுமையும் கண்டனம்

நெளிந்து நழுவிடும் புழு—அதற்கும் நீண்ட நேரம் துன்பம் தந்தால் தாங்காது. பொறுக்குமளவிற்குப் பொறுத்திருக்கும். பிறகு, தன் சின்னஞ் சிறு உடலையும் வளைத்து எழுந்து, 'பார்ப்போம் ஒரு கை' என்றே நினைக்கும்! புழுவும் புலியாகும்—இதனைப் புரிந்துகொள்ளட்டும்.

பூட்டிய அறையில் மாட்டிக்கொண்ட பூனையும் கொஞ்ச நேரந்தான் அடங்கியிருக்கும்—கதவு திறக்கப்படுகிறதா என்று சற்று காத்திருக்கும், பிறகு கதவருகே செல்லும், தட்டும்! நேரம் ஆக ஆக 'பூறும், பிராண்டும்'—பூனை யானையாகிவிடும் சந்தர்ப்பங்கள் உண்டு!

புறு வல்லூறைக்கூடத் துரத்தியடிக்க முனைந்துவிடும்! கவனமிருக்கட்டும்.

பசு புலியைக்கூட கொன்றுவிடுவதுண்டு! நினைவில் நிறுத்துங்கள்.

ஆடுகூட, காட்டரசன் சிங்கத்தை ஆட்டிவைத்திடும் நிலை பிறக்கலாம்-மறந்துவிடக்கூடாது.

கோழையின் உடலிலே சிங்க இரத்தம் ஓடுவதுண்டு, சிலசமயங்களில்!

ஆளவந்தாரே, அறிந்துகொள்ளுங்கள்! பொதுமக்களை எலியென எண்ணி, எளனப்படுத்திவிடாதீர்—அவர்கள் பூட்டிய இரும்புக் கூட்டினுள் கிடக்கும் புலிகள்!—தூங்கிடும் சிங்கங்கள்-குறும்புகள் புரிந்து கோபத்தைக் கிளறுதீர்! அடங்கியிருக்கிற வெள்ளம் அவர்கள்—உன் ஆர்ப்பாட்டத்தை நீட்டாதீர்!

ஆம், ஆளவந்தாரின் அடக்குமுறையைக் கண்டு பொங்கி வெழுந்துவிட்டனர் பொதுமக்கள். குமுறும் எரிமலை அவர்கள் உள்ளம்—கொந்தளிக்கும் கடல் அவர்கள் எண்ணம், சுழன்றடிக்கும் சூறவளி அவர்கள் செயல், இன்று!

தி. மு. க. பொதுச் செயலாளர் அண்ணுதுரையையும், திராவிடர் கழகத் தலைவர் பெரியாரையும், முறையே 'ஆரிய மாயை' 'பொன்மொழிகள்' ஆகிய நூல்களை எழுதினுர்கள் என்ற குற்றத்திற்காக ஆறுமாத சிறைத் தண்டனை அளித்துவிட்டது, ஆளவந்திருக்கும் அஹிம்சா வீரர்களின் ஆட்சி!

அடக்குமுறையின் அடி முதல் நுனிவரை அவர்கள் பயன்படுத்திப் பார்த்துவிட்டார்கள்! வெட்கம், வேதனை!

ஆளவந்தாரே, எச்சரிக்கிறோம், நல்லெண்ணத்தோடு! பொதுமக்களுக்குப் புல்லளவேனும் மதிப்புத் தராமல், உன் போக்கில் போவதால், ஆபத்து—அபாயம்! நாட்டின் தலைவர்களை இரும்புக் கூட்டில் பூட்டி வைத்துவிட்டாய்—நாடே அதிர்ச்சி யடைந்துவிட்டது! மக்கள் கொதிப்படைந்துவிட்டார்கள்! அவர்களை புழுவாக, பூனையாக, புறுவாக, பசுவாக எண்ணிவிடாதே!

அவர்கள் பொட்டுப் பூச்சிகளல்ல, புன்மைத் தேரைகளுமல்ல—அடங்கியிருக்கும் அக்னிமலை! அவர்கள் ஆமைகளுமல்ல, ஊமைகளுமில்லை—படுத்துக் கிடக்கும் சிறுத்தையர் கூட்டம்!

'ஊமையோ, அன்றி அனந்தலோ, ஏமப் பெருந்துயில் பட்டாரோ' என்று பாடிடும் நிலையில் இல்லை அவர்கள்.

நாட்டில் நடந்துள்ள கண்டனக் கூட்டங்கள், ஊர்வலங்கள், அப்பொழுது அவர்கள் எழுப்பிய முழக்கங்கள்—பரப்பப்பட்ட துண்டறிக்கைகள், ஒட்டப்பட்ட சுவரொட்டிகள் எல்லாம் சொல்லுகின்றன, மேலே சொல்லியவைகளை! அவர்கள் தடையை மீறியிருக்கிறூர்கள், தடுத்த நூலை எடுத்து விற்றிருக்கிறூர்கள்.

சென்னையிலிருந்து தூத்துக்குடிவரை—பட்டி தொட்டிகளிலெல்லாம் இதுவே பேச்சு' அதுவே தமிழ்நாட்டின் மூச்சாகிவிட்டது!

தி. மு. க. தோழர்களும், தி. க. தோழர்களும், அங்கங்கே பொதுமக்களைத் திரட்டி, பொல்லாத பாதையில் போய்க்கொண்டிருக்கும் ஆளவந்தாருக்கு அபாய அறிவிப்பைத் தெரிவித்திருக்கின்றனர்—பலமுறைகளில்! கூட்டம், ஊர்வலம், முழக்கம், நூல் விற்றல், தடையை மீறல் என்று பலவிதமான வகைகளில்!

கண்டனங்களை இங்குத் தொகுத்துத் தருகிறோம்.

**சீறிடும் சென்னை**

பொதுச் செயலாளர் அண்ணுதுரை பெரியார் இருவரும் சிறை சென்றனர் என்ற செய்தி 18-9-50 அன்று மாலை 6 மணிக்கே கிடைத்தது சென்னைத் தலைமை நிலையக் காரியாலயத்தில் காலையிலிருந்தே இயக்கத் தோழர்கள் ஏராளம் வந்து விசாரித்தவண்ணமே இருந்தனர். சென்னை இயக்க முன்னணித் தோழர்கள் பலர் கழகக் காரியாலத்திலேயே காலையிலிருந்தே தங்கிவிட்டனர்.

அன்று மாலை பிராட்வே தோழமைக் கழகத்தால் நடத்த இருந்த கூட்டமும் மாலை 7 மணிக்கே தொடங்கி, பிறகே பேச்சாளர்கள் பேசினர். இது பற்றிய விளக்கம் 17-9-50-ல் நடந்த பொதுக் கூட்டத்திலும் பேசப்பட்டது.

ஆகவே, சென்னை எங்கும் பரபரப்பாகிவிட்டது. கழகக் காரியாலயத்தின்முன், உடனே பெரிய விளம்பரப் பலகைகள் எழுதிவைக்கப்பட்டிருந்தன. சிறிது நேரத்திற்கெல்லாம் நூற்றுக் கணக்கான தோழர்கள் கூடிவிட்டனர்.

பல பகுதிகளையும் சேர்ந்த கிளைக்கழக நிர்வாகிகள் ஓடோடியும் வந்தனர். உணர்ச்சிப் பெருக்கோடு, 'எங்கள் பங்கென்ன?' என்று கேட்டனர். கண்டனக் கூட்டம் நடத்தவும், ஊர்வலம் நடத்தவும், சுவரொட்டிகள் அச்சிடவும், அவர்கள் துடித்தனர்.

இரவு முழுவதும் இயக்கத் தொண்டர்கள் பலர், சுவர்களிலெல்லாம் அடக்குமுறை ஆட்சியை எதிர்த்திடும் வார்த்தைகளை எழுதினர்—தார் ரோடுகளிலெல்லாம் சிறைசென்ற செய்தியை எழுதினர்!

சென்னை. சிறை சென்ற செய்தி வந்ததிலிருந்து உறங்கவில்லை — அங்கங்கே, ஆத்திரத்தோடு இயக்கத் தோழர்கள், குகையிலிருந்து கிளம்பிய புலிகளைப்போல உலவினர்.

இரவு பத்து மணிக்கே சென்னை மாவட்ட கமிட்டி உறுப்பினர்கள் பலர் கூடி, மறுநாள் பகலில் கமிட்டியைக் கூட்ட திட்டமிட்டனர்.

சென்னை, எரியும் நெருப்பாக இருந்தது, சிறைத் தண்டனை ஏற்றனர் அண்ணு பெரியார் என்ற செய்தி கேட்டதிலிருந்து!

மறுநாள், காலைக் கதிரவன், சென்னையின் ஒவ்வொரு வட்டத்திலும், குறிப்பாக மயிலாப்பூர், மந்தவெளி, குயப்பேட்டை, கொச்சிக்குப்பம், இராயப்பேட்டை, ஐகோர்ட் ஆகிய இடங்களிலும், வேறு பல பகுதிகளிலும், கெப்பு-பச்சை-கருப்பு என்று பல வர்ணங்களால் தீட்டப்பட்ட விதவிதமான சுவரொட்டிகளைக் கண்டு கலக்கப்போனுன்!

முக்கிய இடங்களில் பொதுக்கூட்டங்கள் நடைபெறத் திட்டமிட்டு கூட்டங்கள் நடந்தன (விவரம் வேறொரு இடத்தில்).

**திடுக்கிட்டது தேசமுகப்பேட்டை**

19—9—50 இரவு 9-30 மணிக்கு தலைச் செயலாளர் தலைமையில் நடந்த தி. மு. க. கமிட்டிக் கூட்டத்தில், சர்க்காரின் அடக்குமுறையைத் தாக்கிப் பேசினர் தோழர்கள். பிறகு அண்ணுத்துரை, பெரியார் ஆகியோரை சிறையிட்டதைக் கண்டித்துத் தீர்மானம் நிறைவேற்றப்பட்டது. மாமல்லபுரத்தில் தியாகருக்குக் கருப்புக் கொடி பிடிக்க உதவிய தோழர்களுக்கு நன்றி தெரிவித்தும் தீர்மானம் நிறைவேற்றப்பட்டது. கன்னியிலும் நாட்டின் தலைவரை மீட்டிடத் தீர்மானம் செய்து காரசாரமாகப் பேசினர். தேசமுகப்பேட்டையே, தலைவரின் சிறைவாசம் கேட்டுத் திடுக்கிட்டுவிட்டது.

**காஞ்சியின் கடுங்கோபம்!**

காஞ்சிபுரத்திற்கு, அண்ணு, பெரியார் ஆறுமாத சிறைத் தண்டனை ஏற்றனர் என்ற திருச்சி செய்தி மாலை 6மணிக்கு மேலே கிடைத்தது. 'திராவிட நாடு' நிலையத்தில் இயக்கத்தவர் ஆர்வத் துடிப்போடு அடிக்கடி வந்து விசாரித்த வண்ணமிருந்தனர். மாலை, செய்தியை வெளியிட்டதும், காஞ்சிபுரத்தின் பல பகுதிகளில் மக்கள் திரள் திரளாக கூடிவிட்டனர். அங்கு திகைப்பு, ஆத்திரம், வியப்பு, வீரம், விவேகம், சிந்தனை, தெளிவு இப்படிப் பலவற்றை அள்ளித் தரும் சொற்களை வீசியவண்ணமே இருந்தனர் மக்கள்!

மூலை முடுக்குகளிலெல்லாம், திராவிட இயக்க காளைகள் 'மெகபோன்' மூலம், இந்தச் செய்தியை பரப்பினர், அங்கங்கே பெரிய பெரிய சுவரொட்டிகள் ஒட்டினர். அண்ணு, பெரியார் எழுத்துரிமை காக்கப் போராடி, சிறை சென்றனர் என்பதைப் பொதுமக்கள் அறியும்படித் துண்டு வெளியீடுகளை எங்குநோக்கினும், 'எவர் கரத்திலும் இருக்கும்படிச் செய்து விட்டனர், இரண்டுமணி நேரத்திற்குள்ளெல்லாம்.

எப்பொழுது, விடியும், ஆத்திரத்தீர, எதேச்சாதிகார காங்கிரஸ் ஆட்சியை எதிர்த்திடக் கிளம்புவோம் என்று காத்துக் கிடந்தனர், காளையர்.

திராவிட இயக்கப் பிரமுகர்கள் பலரும், கடைவீதியிலுள்ள எல்லாவியாபாரிகளையும் கடைகளைமூடவேண்டும் என்று அமைதியாகக் கேட்டுக்கொண்டனர். பல வியாபாரிகள் தாங்களாகவே கடைகளை அடைத்து விட்டனர்.

இருகழகக் கொடிகளையும் ஏந்திய வீரர்கள் மாபெரும் ஊர்வலமாகக் கிளம்பினர். போலீஸ் அனுமதியும் அளிக்கப்பட்டு, போலீஸ்லாரியும் ஊர்வலத்தோடு வந்தது பல வீதிகளில் சிறை சென்ற செய்தியைத் தெரிவிக்கும் சுவரொட்டிகளையே கொடிகளாகக் கட்டியிருந்தனர். 'அண்ணுவை சிறைப்படுத்திய சர்க்கார் ஒழிக' 'பெரியாரைச் சிறையிட்ட சர்க்கார் ஒழிக' எழுத்துரிமையை பறித்திடும் எதேச்சாதிகார சர்க்கார் ஒழிக' என்று முழங்கினர். பெரிய காஞ்சிபுரம், ஆடிசன்பேட்டை, ஆகிய பகுதிகளில் ஊர்வலம் வந்து முடிந்தது.

அன்று மாலை 6-மணிக்கு ஆடிசன்பேட்டையில் தோழர் சி. வி. எம். அண்ணுமலை தலைமையில் நடந்த மாபெரும் கண்டனக் கூட்டத்தில் ஆயிரக்கணக்கான மக்கள் ஆர்வத்தோடு கூடியிருந்தனர். ஆளவந்தாரின் அடக்குமுறையைக் கண்டித்தும், அண்ணு, பெரியாரைசிறைப்படுத்திய கொடுமையைக் கண்டித்தும், இரா. நெடுஞ்செழியன் எம். ஏ., நடிப்புப் புலவர் கே. ஆர். இராமசாமி, சி. பி. இராசமாணிக்கம் ஆகியோர் பேசினர்.

காஞ்சிபுரம் எங்கும் இதே பேச்சாகவே இருந்தது. மக்கள், குமுறும் எரிமலைகளாக உலவுகின்றனர். அடக்குமுறை வீசிய காங்கிரசாட்சியைக் கண்டித்துப் பேசாதார் எவருமில்லை,

**கடலூரில் கண்டனம்**

வகுப்புத் துவேஷக் குற்றம் சாட்டப்பட்டுப் பொதுச்செயலாளர் அண்ணுவையும், பெரியாரையும் சிறைப்படுத்தியதைக் கண்டிப்பதற்காக, 19—9—50 மாலை6-மணிக்கு கடலூர் (ப. ப.) தி. மு. க., தி. க., தோழர்கள் அனைவரும் சேர்ந்து

# ஆளவந்தாரே, அடக்குமுறையை நம்பாதீர்!

ஒரு மாபெரும் ஊர்வலம் நடத்தினர். உள்ளூர் வியாபாரிகள், முஸ்லீம் தோழர்கள் பலரும் இதில் கலந்துகொண்டு ஒத்துழைத்தனர். 'அடக்குமுறை ஆட்சிஒழிக' 'எழுத்துரிமையைப் பறிக்காதே!' 'சட்டம் மாறும், சமூகம் நிலையானது' 'அண்ணாவை விடுதலை செய்' 'பெரியாரை விடுதலை செய்' என்று வானதிர முழங்கிய வண்ணம் முக்கிய வீதிகளின் வழியே சென்றனர். இரு கொடிகளுமேந்தி அவர்கள் புறப்பட்ட இடமாகிய பகுத்தறிவுக் கழகத்திலேயே மீண்டும் வந்தனர். ஊர்வலம் பிறகு கலைக்கப்பட்டு தோழர்கள் அனலை மூச்சாக்கி, பேச்சாக்கி' இல்லம் நோக்கி நடந்தனர்.

## கொதித்தெழும் குடந்தை

19—9—50 மாலை 6-மணிக்கு குடந்தை இரயிலடித் தெரு நாடார் தோட்டத்தில், கே. கே. நீலமேகம் தலைமையில் நடந்த கண்டனப் பொதுக் கூட்டத்தில், 'புதிய அரசியல் அமைப்பில் எல்லோருக்கும் பேச்சுரிமை, எழுத்துரிமை உண்டென்றும் பேசிடும் காங்கிரசாட்சி, பலவாண்டுகளுக்கு முன் பேச்சின் மூலம், எழுத்தின் வாயிலாக சொல்லிவந்த கருத்துக்களின் தொகுப்பான 'ஆரியமாயை' 'பொன்மொழிகள்' என்ற நூல்களை வெளியிட்டதற்காக அண்ணாவுக்கும், பெரியாருக்கும் ஆறுமாதம் சிறைவாசம் அளித்துள்ளதை வன்மையாகக் கண்டிக்கிறோம்!' என்று தீர்மானம் நிறைவேற்றப்பட்டது. எஸ். கே. சாமி, தெய்வசிகாமணி, புதுக்கோட்டை ஞானமுத்து ஆகியோர் பேசினர். இராசகோபாலன் நன்றி கூறினர்.

## அரியலூர் அடக்குமுறை எதிர்ப்பு

அரியலூர் முழுவதும், ஒரே பரபரப்பு! தி. மு. க. தோழர்கள் துண்டுவெளியீடுகள் மூலம் அண்ணாவும், பெரியாரும் சிறைப்படுத்தப்பட்ட செய்தியை எடுத்து விளக்கினர்.

## அருப்புக்கோட்டை தரும் ஆதரவு

19—9—50 இரவு 7-30-மணிக்கு தி. மு. க. சார்பில் தியாகராய வாலிபர் சங்கத்தின் முன்பாக, கழகச் செயலாளர் சு. காளிமுத்து தலைமையில் அண்ணா, பெரியார் ஆகியோரை சிறைபடுத்த செய்த சர்க்கார் போக்கைக் கண்டித்து சிவ. சண்முகசுந்தரன், எம். எஸ். இராமசாமி ஆகியோர் பேசினர். கண்டனத் தீர்மானம் நிறைவேற்றப்பட்டது!

## தாத்தையங்கார் பேட்டையில்!

19—9—50 தி. மு. க. சார்பில், நல்லமுத்து தலைமையில் நடந்த கண்டனக் கூட்டத்தில் மு. பெ. முத்துக்கருப்பன், எம். எஸ். என். இராசன், நாராயணசாமி ஆகியோர் பேசினர். கண்டனத்தீர்மானம் நிறைவேற்றினர்.

## தூத்துக்குடியில் ஆத்திரம்!

'ஆரியமாயை' வழக்கு தீர்ப்பில் அண்ணாவுக்கு 6-மாத தண்டனை என்ற செய்தி தந்தி மூலம் கிடைத்தவுடன் 18-ம் நாள் இரவே நகரெங்கும் தட்டிகளில் செய்தி விளம்பரப் படுத்தப்பட்டது. துண்டு வெளியீடுகள் மூலம் 19-9-50 மாலை ஊர்வலமும், கண்டனக் கூட்டம் உண்டென்று அறிவிக்கப்பட்டது! நகரில் 144-தடை விதிக்கப்பட்டிருந்ததால் ஊரில் ஒரே பரபரப்பு உண்டாக்கிவிட்டது. அன்று மாலை 4-மணிக்கு தூத்துக்குடியில் பக்கத்திலிருந்து ஓர் மிகப் பெரிய ஊர்வலம் போலீஸ் ஸ்டேஷன் வழியாக முக்கிய வீதிகளில் சென்று தருவை மைதானத்தில் கலைந்தது. 6-மணிக்கு தருவை (வ. உ. சி) மைதானத்தில் சண்முகம் தலைமையில் நடந்த கண்டனக் கூட்டத்தில் இரத்தினம், நடராஜன், எம். எஸ். இராமசாமி, தங்கப்பழம் ஆகியோர் பேசினர். 'ஆரியமாயை' 'பொன் மொழிகள்' வழக்கில், பொதுச் செயலாளர் அண்ணா, தி. க. தலைவர் ஆகியோருக்கு அளித்த தண்டனையை வன்மையாகக் கண்டிக்கிறோம் என்று தீர்மானங்கள் நிறைவேற்றப்பட்டன.

## கொதிப்படைந்தது கோவில்பட்டி

19—9—50 காலை 9-மணிக்கு தி. மு. க., தி. க., தோழர்கள் தமிழரசனது இரட்டைச்சுழல் வண்டி நிலையத்திலிருந்து கிளம்பினர். 'ஆரியமாயை' 'பொன்மொழிகள்' வழக்கின் தீர்ப்பில் தங்கள் அதிருப்தியைத் தெரிவித்திடும் வகையில் முழக்கங்கள் எழுப்பப்பட்டன. ஊர்வலம் முக்கிய வீதி வழியே சென்று இராமசாமி சினிமா தியேட்டருக்குச் சுமார் 12-மணிக்கு வந்தது. ஊர்வலத்தில் கலந்துகொண்ட தி. மு. க., தி. க., தோழர்களில் சிலர்—ஈ. வே. அ. வள்ளிமுத்து செ. அருணாசலம், டபிள்யு டி. துரைசாமி, தமிழரசன், வி. டி. பதி, சந்திரன், வி. ஆர். பி. மாரியப்பன், எஸ். கே. டி. சாமி, எஸ். எம். காசி, எஸ். கே. ர. பால்ராஜ், எஸ். டி. சீனியப்பா, நெல்லை தியாகராசன் மற்றும் பலர்.

பகல் 12-மணிக்கு ஈ. வெ. அ. வள்ளிமுத்து தலைமையில் நடந்த கண்டனக் கூட்டத்தில் சீனியப்பா, அருணாசலம் முதலியோர் பேசினர். கண்டனத் தீர்மானங்கள் நிறைவேற்றப்பட்டன.

சமூகநீதி கோருவது குற்றமெனக் கூறி, நேர்மைக்கு மாறாக ஆளவந்தார் 'ஆரிய மாயை' 'பொன் மொழிகள்' வழக்கில் நடந்துகொண்டிருப்பதை வாபஸ் பெறவேண்டும். இன்றேல் நேரடி நடவடிக்கை எடுத்து நீதி மன்றங்களை பகிஷ்கரிக்க வேண்டும் என்றும் தீர்மானித்தனர்.

## தண்டனையை எதிர்த்து கண்டனம் எழுப்பிய நகரங்கள்

*

| | |
|---|---|
| சென்னை | திருவத்திபுரம் |
| மயிலாப்பூர் | செகநாதபுரம் |
| காஞ்சி | திருச்சி |
| தேசுமுகிப்பேட்டை | சங்கரநயினார்கோவில் |
| திண்டுக்கல் | நாட்றம்பள்ளி |
| தூத்துக்குடி | கணியூர் |
| கோவில்பட்டி | பலமகோட்டை |
| மருதானை | இடையப்பட்டி |
| கடலூர் ஓ. டி. | உறையூர் |
| குடந்தை | கூனூர் |
| அரியலூர் | பெட்டைக்குளம் (இலங்கை) |
| அருப்புக்கோட்டை | திரிகோணமலை " |
| தாத்தையங்கார் பேட்டை | தேனி |
| எட்டயபுரம் | கோவை |
| பணகுடி | புதுக்கோட்டை |
| விருத்தாசலம் | மதுரை |
| போளூர் | காங்கேயம் |
| சிதம்பரம் | விக்கிரமசிங்கபுரம் |
| மணப்பாறை | வடக்கந்தல் |
| தேவகோட்டை | ஆம்பூர் |
| இடைப்பாடி | புதுப்பாளையம் (இராசை) |
| குடியேற்றம் | திருநெல்வேலி |
| திருக்கழுக்குன்றம் | வந்தவாசி |
| பொள்ளாச்சி | தக்கோலம் |
| திருப்பத்தூர் | |

## திண்டுக்கல் கண்டனத் தீர்மானம்

19—9—50 மாலை 6-மணிக்கு மாரியம்மன் திடலில், என். முத்து, தலைமையில் நடந்த பொதுக் கூட்டத்தில் அங்குச்சாமி, தங்கவேலு, இல. வீராசன், நடிகர் கந்தசாமி ஆகியோர் பேசினர். சர்க்காரின் அடக்குமுறை ஆட்சியின் அந்திய காலம் நெருங்கிக்கொண்டே இருக்கிறது என்பதை எடுத்துக்காட்டி, திராவிடத்தின் தலைவர்களை சிறையில் பூட்டிய நிகழ்ச்சியை மிக வன்மையாக கண்டித்துப் பேசினர். தீர்மானங்களும் நிறைவேற்றினர்.

## கொழும்பிலும் கொந்தளிப்பு

கொழும்பு மருதானை தி. மு. க. சார்பில் 19—9—50ல் முனிசுவாமி தலைமையில் நடந்த செயற்குழுக் கூட்டத்தில், நிபந்தனையின்றி பொதுச் செயலாளரையும், திராவிட கழகத் தலைவரையும் விடுதலை செய்யவேண்டும் என்று தீர்மானம் நிறைவேற்றினர்.

## எட்டயபுரம் காட்டிய வெறுப்பு

ஆட்சியாளரின் போக்கிற்கு வெறுப்பைக் காட்ட எட்டயபுரத்தில் 19—9—50 இரவு 8 மணிக்கு தி மு. க. சார்பில் நடுவிற்பட்டி பட்டத்து விநாயகர் கோவில் முன் இராமசாமி தலைமையில் நடந்த கூட்டத்தில் மே. க. முத்து, பெ. அன்பானந்தன், கலிங்கன், ஆகியவர்கள் பேசினர், அண்ணாவையும், பெரியாரையும், எழுத்துரிமை பேசி இன்று நாடாளும் தகுதி பெற்ற காங்கிரசாட்சி, புத்தகங்கள் எழுதிய குற்றங்களுக்காக சிறையிட்டிருப்பதை மிகவும் கண்டித்துப் பேசினர்.

## மணப்பாறையில்!

21—9—50 மாலை 6 மணிக்கு சமுத்திர பாண்டியன் தலைமையில் நடந்த பொதுக்கூட்டத்தில் மூர்சாமி, நெடுமாறன், டி. கே. சீனுவாசன் ஆகியோர் வெகுநேரம் விளக்கமாகப் பேசினர். சீனுவாசன் பேசுகையில், "ஆணவஆட்சியே, கொஞ்சம் நிதானத்துடன் சிந்தித்துப்பார், அண்ணாவை சிறையில் தள்ளிவிட்டால் எங்களை அழித்துவிடலாம் என்று எண்ணிப் பூரிக்காதே! ஆசை பொசுங்கி நாசமாகத்தான் போவாய். அண்ணா தன்னை வளர்த்துக் கொண்டது மட்டுமல்ல, தன்னைப் போல ஆயிரக்கணக்கானவரை வளர்த்துவிட்டிருக்கிறார். ஒரு அண்ணா சிறையில் ஒன்பதினாயிரம் அண்ணாக்கள் வெளியில்' சிறையில் அண்ணாவை சிக்கவைத்துவிட்டதாலேயே சிரித்துவிடாதே! சீரழிந்து போவாய்'—அண்ணாவுக்கும் மற்றவர்களுக்குமுள்ள வித்தியாசம் அதுதான்—முன்னாள் தலைவர் பெரியார் தன்னை வளர்த்துக் கொண்டார். பிறரை வளரவிடவில்லை. நம் முன்னாள் இயக்க சரித்திரம் இதைச் சொல்லும். நம் மறைந்த தளபதி அழகிரி தன்னை வளர்த்துக் கொள்ளவில்லை! பிறரை மட்டும் வளர்த்துவிட்டார். அண்ணா தன்னைப்போல பல எழுத்தாளர்களை, பேச்சாளர்களை, நாடகாசிரியர்களை உண்டாக்கிவிட்டார். ஆகவேதான் ஆளவந்தார் ஏமாறக்கூடாது என்று எச்சரிக்கின்றேன்" என்று குறிப்பிட்டார்.

## காஞ்சிபுரம் செய்திகள்

11-9-50-ல் பகுத்தறிவு மன்றத்தார், காஞ்சி ஆடிசன்பேட்டையில், கருணாநிதி, கண்ணதாசன், அரங்கண்ணல், தில்லை-வில்லாளன் ஆகியோரை அழைத்து நடத்திய கூட்டத்திற்கு வசூலாகிய தொகை ரூ. 74-ம், செலவு தொகை ரூ. 36-7-0ம், செயற்குழுவாரால் ஒப்புக்கொள்ளப்பட்டு, வரவு செலவு விவரத்தையும், கையிருப்பு ரூ. 37-9-0 என்பதையும் அச்சிட்டு, நன்கொடை வழங்கியவர்களுக்கெல்லாம் அனுப்பப்பட்டுள்ளது.

15—9—50ல் பெரிய காஞ்சிபுரம் சம்மந்தம் அவர்கள் இல்லத்தில் கூடி ஒய். எம். டி. ஏ. அமைத்தனர். தலைவர்:— எஸ். சம்பந்தம், செயலாளர், முத்துசாமி, கூட்டுச் செயலாளர்:— சி. எல். சஞ்சீவி, பொருளாளர்:— எம். ஏ. குட்டி, செயற் குழு உறுப்பினர்கள்:— ஏ. கண்ணன், ராமசாமி, சுந்தரம், கண்ணன், வரதராசன்.

24—9—50ல் எம். பி டி. மூர்த்தி தலைமையில் நடந்த திராவிட மறுமலர்ச்சி மன்ற நிர்வாகக் குழுக் கூட்டத்தில், இதுவரை நடந்த வரவு செலவுகளைப் பரிசீலிக்க நான்கு பேர் கொண்ட கமிட்டியை நியமித்து, அதிகாரம் அளிக்கவும் மாகாண தி. மு. க. பட்டியலில் இடம்பெறும் முறையில் மீண்டும் ஒருமுறை எழுதிக் கேட்க செயலாளருக்கு அனுமதி அளிக்கவும், கழகச் செயலாளர் ஜி. எஸ். மணியின் இராஜிநாமாவை அடுத்த கமிட்டிக் கூட்டத்தில் ஆலோசனைக்கு எடுத்துக் கொள்வதெனவும், தி. ம. க. உறுப்பினர் ஏ. ஆர். வெங்கட்ராமன் இராஜிநாமாவை கமிட்டி அங்கீகரித்து, அவர் இதுவரை ஆற்றிய தொண்டைப்பாராட்டியும், அண்ணா, பெரியார் சிறைப்படுத்தியதைக் கண்டித்தும், வகுப்புரிமையை மறுக்கும் இந்திய சர்க்காரின் சட்டத்தை கண்டித்தும், அதனை, மாற்றியமைக்க வேண்டியும், பச்சையப்பன் கல்லூரியை ஏற்படுத்தியவர்களைப் பாராட்டியும், மறைந்த மறைமலையடிகள், சேலம் கல்லூரித் தலைவர் இராமசாமி ஆகியோர் மறைவுக்கு வருந்தியும் தீர்மானங்கள் நிறைவேற்றப்பட்டன.

1—10—50 காலை 10 மணி யளவில் தி. ம. கழகக் கட்டிடத்தில் தி. ம. க. செயற்குழுவினர் கூட்டம் நடைபெறும் எனவும், அன்று மாலை 5-மணிக்கு பொதுக்குழு உறுப்பினர் கூட்டம் நடைபெறும் என்றும் கண்ணன், சபாபதி ஆகியோர் அறிவிக்கின்றனர்.



Edited Printed & Published by C. N. Annadurai M A at Dravida Nadu" Press 95, Tirukkachinambi Street Kancheepuram

